



உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்


# சைவசாஸ்திர பரிபாலனம்

| தொகுதி உ | விஷு ௵ சித்திரை ௴<br>1941 ஏப்ரில் | பகுதி ௪ |
|---|---|---|


பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

## சிவபெருமான் காமனைத் தகித்தமை

ஏனையர்பால் வெற்றிகொண்டா னின்னோ டெதிர்த்திறந்தான்
தூநறும்பூ வாளியான் சோமேசா—மானம்
வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

(சோமேசர் முதுமொழிவெண்பா)

(இதன் தாற்பரியம்:) சோமேசா! தம்மின் வலியார்க்குப் பகையா தெதிர்தலை யொழிக; ஏனை மெலியார்க்குப் பகையாதலை ஒழியாது விரும்புக; அஃதென்னையெனின், புஷ்பபாணங்களை யுடைய காமன் மற்றவர்களிடத்து வெற்றியடைந்தான். தேவரீரோடு எதிர்த்து இறந்தான் என்பதாம்.

சோமேசர் என்பது தொண்டை நாட்டின்கணுள்ள குளத்தூரில் கோயில்கொண்டிருக்கும் பெருமானார் திருநாமம்.

**விட்டுணுமூர்த்தி** புத்திரப்பேறு காரணமாகச் சிவபெருமானுடைய திருவடிகளை தஞ்சமென்று நினைத்து அனேக காலந் தவஞ்செய்தார். சிவபெருமான் பூதப்படை சூழ உமாதேவிசமேதராய்த் தோன்றியருளினர். விட்டுணுதேவர் விரைந்

தெழுந்து வணங்கிநின்றார். சிவபெருமான் மகிழ்ந்து "உனக்கு வேண்டிய வரம் யாது?" என்று வினவியருளினர். திருமால் "எம்பெருமானே! அடியேனுக்குப் புத்திரப்பேற்றைத் தந்தருளுக" என்று வேண்டினர். சிவபெருமான் நன்றென்று திருப் புன்முறுவல் செய்து "உனக்கோர் புத்திரனை உதவினேம்" என்றருள்புரிந்தார். விட்டுணு முன் செய்த வினையினால் உமாதேவியாரைச் சிறிதும் அன்புசெய்து துதித்திலர் அப்பொழுது உமாதேவியார் விட்டுணுவை நோக்கி, "நீ இங்கே அவமதித்தாய். ஆதலால், எம்பெருமானிடத்தும் அன்புடையையல்லை. நீ பெறும் புத்திரனும் எம்பெருமானுடைய முனிவால் அழிக" என்று சாபத்தைக் கூறி, சிவபெருமானை நோக்கி, "பரப்பிரமமும் யானே அல்லதில்லையென்று அறிவிலிகளாகிய மனுடரை மருட்டித் திரிகின்ற வஞ்சகனாகிய இவன்முன் ஞானிகளது அறிவினாலன்றி அணுகுதற்கரிய தேவரீர் அணுகி நிற்கலாமா? மீண்டு செல்வோம் வருக" என்று சொற்றுச் சிவபெருமானை அழைத்துக்கொண்டு போயினர்.

திருமாலுடைய மனத்தினின்று மன்மதன் தோன்றினன். அவன் விட்டுணுவினுடைய அனுமதிப்படி காசியம்பதியிற் சிவலிங்கப் பிரதிட்டைசெய்து அவ்விலிங்கத்துக்குச் சித்தசன் என்னும் நாமம் வைத்துப் பூசிப்பானாயினன். மகாதேவர் மன்மதனுடைய பூசைக்கிரங்கி, உமாதேவியாருடன் பிரசன்னராகி, கருப்புவில்லு பஞ்சபாணம் முதலியவற்றைக் கொடுத்தருள, அவன் அவைகளைப் பெற்றுக்கொண்டு ஆன்மாக்களுக்கு ஆசையுண்டாக்கி வெற்றிகொண்டிருந்தான்.

விட்டுணுவினது கட்டளைப்படி பிரமதேவர் காமனை அழைத்து, "நீ எங்கள் பொருட்டுத் திருக்கைலாசகிரியிற் சென்று, சிவபெருமான் மௌனநீங்கி, மலைமகளாயெழுந்தருளியிருக்கும் உமாபிராட்டியாரைத் திருக்கல்யாணஞ் செய்யும் பொருட்டு அவர்மீது உன் பாணங்களைச் செலுத்துவாயாக" என்று கட்டளை செய்தார். பிரமதேவர் புகன்றவற்றை மன்மதன் கேட்டு "சிவ! சிவ!" என்று காதைப் பொத்தி, இப் பெருங் கொடும் பாவத்தை விளைக்கும் இவ்வசனத்தைக் கேட்டேனே! யென்று துன்பமுற்று, "சிவபெருமானுக்கு மாறுகொண்டு பொர மாட்டேன். இஃதன்றி எனக்கடுத்ததொன்று சொல்லும்; செய்

வேன்" என்றான். உடனே பிரமதேவர் "அவ்விதம் புரியின் உய்தி; அல்லதேல் உனக்குச் சாபமிடுவேன். உன் எண்ணம் யாது? சொல்லுதி" என்றார். மன்மதன் "உமது சாபத்தினால் துன்பம் அனுபவித்தலில் சிவபெருமானது திருமுன்பு சென்று புட்பபாணங்களைச் செலுத்தி இறப்பினும் சிறந்தது" என்று கூறித் தன் மனதைத் தேற்றி ஒருப்பட்டான். பின்பு அவன் தன் நகரடைந்து இரதியையும் ஒருப்படுத்திப் புஷ்பபாணங் களிட்ட தூணியை முதுகிலே கட்டி, வில்லைக் கையிற்கொண்டு தென்றற் றேரில் இரதியோடும் ஏறித் திருக்கைலாசமலையை அணுகினன். கைலமலையைக் கண்டு தேரினின்றுமிறங்கி அங்கே புணர்ச்சியின்றியிருந்த மிருகங்களுக்கும் பறவைகளுக்கும் காமப் பற்றுண்டாக்க நினைத்து வில்லை வளைத்துப் பூம்பாணங்களைத் தொடுத்தான். திருநந்திதேவர் அதுகண்டு கோபித்து, இது மன்மதனுடைய செய்கையே என்று திருவுள்ளங்கொண்டு, உம் என்று உரப்பினார். மன்மதபாணங்கள் ஆகாசத்திலே தடைப் பட்டு நின்றன. மன்மதன் திருநந்திதேவருடைய ஆண்மையையுங் காவலையும் நோக்கி, நடுங்கி அவரது திருமுன்னிலையை அடைந்து வணங்கினான். திருநந்திதேவர் "காமனே! நீ இக் கிரியில் வந்த காரணம் யாது?" என்று வினவியருள, மன்மதன் பிரமதேவர் செய்த புணர்ப்பு அனைத்தையும் உண்மையாகச் சொன்னான்.

சிவபெருமான் யோகத்திருக்கும்பொழுது யாவர் வரினும் உள்ளே விடுக்கலாகாதெனவும், மன்மதனை மாத்திரம் விடுக்கலா மெனவும் முன்னே தமக்குக் கட்டளையிட்டருளியதைத் திரு நந்திதேவர் உணர்ந்து; "நீ சிவசந்நிதானத்திற் செல்ல விரும்பினை யாயின், மேலைவாயிலாலே செல்லக்கடவாய்" என்றார். காமன் விடைபெற்றுக்கொண்டு. மேலைவாயிலாலே சென்று அமல மூர்த்தி அக்கினிமலைபோல மௌனத்தோடும் எழுந்தருளியி ருந்தமை கண்டு அஞ்சிச் சரீரமுழுவதும் வெயர்வையெழ நடு நடுங்கி வில்லோடும் அவசமாய் வீழ்ந்தான்.

உடனே இரதிதேற்ற மன்மதன் அறிவுபெற்றெழுந்து இம் மஹாதேவரது திருநோக்கினாலே இனிச் சிறிது பொழுதினுள்ளே நுண்பொடியாவேன்; இது விதியின் செய்கையே. விதியை யாவர் கடக்க வல்லவர்; பிரமனாலும் முடியாது என்று பலவாறு

நினைத்து, கீழே விழுந்த வில்லை எடுத்து வளைத்து இரதி தன்னை அகலாது செல்ல இறைவனுக்குப் பக்கத்திற் போய்ப் புஷ்ப பாணங்களை அவர்மேற் செல்லவிட்டான். அவை திருமேனியிற் பட்டன. படுதலும், காமவயத்தரல்லாத உலகருள் காரணராம் சிவபெருமான் காமனைச் சிறிதே நோக்க, அக்கினிவடிவாகிய நெற்றித்திருக்கண் சுட்டது. சுடுதலும் அவன் சாம்பலாயினான். திருக்கைலாசகிரி எங்கும் புகை பரந்தது. மகாதேவர் மன் மதனை எரித்துவிட்டு, முன்போலவே மௌனத்தோடும் எழுந் தருளியிருந்தார்.

இரதிதேவியினுடைய வேண்டுதலுக்கிரங்கி, வேண்டாமை வேண்டுவது மில்லாராகிய விமலனார் இறந்த மன்மதனை எழுப்பி, ஏனையோருக்கு அருவமுள்ளவனாயும் இவளுக்கு மாத்திரம் உருவமுள்ளவனாயும் இருந்து உன்னுடைய அரசியன் முறை யைச் செய் என்று கட்டளையிட்டருளினார். காமனைக் கண்மலராற் சேதித்தருளிய காரணத்தாற் சிவபெருமானுக்குக் காமாரி என்னுந் திருநாமம் உண்டாயிற்று.

அத்தியற்புத அதிமதுரகாவியமாகிய கந்தபுராணத்தால் உணர்த்தப்படும் இச்சரித்திரத்துக்கு ஹவீவகாா உ நுயஂ மன் மதனைச் சாம்பராக்கினார்) என்னும் உபநிடத வாக்கியமே மூல மாம். சிவபெருமான் காமனைத் தகித்தமையாலும், தக்கனுடைய யாகத்தை அழித்தமையாலும், அந்தகாசுரன் சலந்தராசுரன் என்போரை வதைசெய்தமையாலும் வீரர் என்று இருக்கு வேதத்திற் புகழப்பட்டார்.

இச் சரித்திரத்துக்குத் தமிழ்வேதப் பிரமாணங்கள் காட் டுதும்:—

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் (குறிஞ்சி)

*கண்ணிற் கனலாலே காமன் பொடியாகப்*
*‡பெண்ணுக் கருள்செய்த பெருமா னுறைகோயில்*
*மண்ணிற் பெருவேள்வி வளர்தீப் புகைநாளும்*
*விண்ணிற் புயல்காட்டும் வீழி மிழலையே.*

---

‡ பெண்—இரதிதேவி.

திருநாவுக்கரசுசுவாமிகள்

கழைபடு காடுதென்றல் குயில்கூவ வஞ்சு
கணையோ னணைந்து புகலும்
மழைவடி வண்ணனெண்ணி மகவோனை விட்ட
மலரான தொட்ட மதனன்
எழில்பொடி வெந்துவீழ விமையோர் கணங்க
ளெரியென் றிறைஞ்சி யகலத்
தழல்படு நெற்றியொற்றை நயனஞ் சிவந்த
தழல்வண்ண னெந்தை சரணே.

சுந்தரமூர்த்திநாயனூர் (திருவாரூர்.)

ஐவணமாம் பகழியுடை யடன்மதனன் பொடியாகச்
செவ்வணமாந் திருநயனம் விழிசெய்த சிவமூர்த்தி
மையணவுங் கண்டத்து வளர்சடையெம் மாரமுதை
யெவ்வணநான் பிரிந்திருக்கே னென்னாரு ரிறைவனையே.

திருவாசகம்

"காமன்—றனதுட றழலெழ விழித்த—செங்கணு யகனே.

இச்சரித்திரத்திலே சிவபெருமான் திருவருளினாலே விட்டுணு புத்திரப்பேறு பெற்றமையும் காண்கின்றோம். ஆகவே, சிவபூசையானது மோக்ஷத்தையேயன்றிச் சகலபோகங்களையும் உதவும் என்பது பெறப்படும். மஹாவிட்டுணுமூர்த்தியானவர் மகாலிங்கத்தைப் பக்தியினால் அருச்சித்துப் பரமபதத்தை அடைந்தார் என்று புராணம் பகர்வதால் சிவபூஜாபலத்தினாலேயே பிரமவிட்டுணுக்கள் தமது பதவிகளையும் அதிகாரகிருத்தியங்களையும் பெற்றனர் என்பது வெளிப்படை. ஆகவே விட்டுணுவுக்குக் காத்தற்றொழில் சுதந்திரமன்று. சுதந்திரமாயின், தன் மகனாகிய மன்மதனைச் சிவபெருமான் நீறாக்கிய காலத்தில் நீறுபடாமற் காத்திருக்கலாம். அங்ஙனம் செய்யாமையாலே அத்தொழில் அவருக்குச் சுதந்திரம் அல்லவாதல் அறிக.

சிவஞானசித்தியார் க-உ-உச.

உரைத்தவித் தொழில்கள் மூன்று மூவருக் குலக மோத
வரைத்தொரு வனுக்கே யாக்கி வைத்ததிங் கென்னை யென்னின்
விரைக்கம லத்தோன் மாலு மேவலான் மேவி னோர்கள்
புரைத்ததி கார சத்தி புண்ணிய நண்ணு லாலே.

சிவபெருமானுக்குப் பின்னமாகாத சத்தியை அவரினின்று வேறுபடுத்தி மனம் வாக்குக் காயங்களினுலே நினைப்பதும் பேசுவதும் பூசியாதுவிடுவதும் குற்றமாம். அது விட்டுணு பெற்ற சாபத்தினுலே நன்கு தெளிவாயிற்று. ஆதலாற் சிவவழிபாட்டிற்குச் சிவசத்தியார் நியமமாக வேண்டப்படுவரென்பது பெறப்பட்டது. உலகமாதாவாகிய எம்பெருமாட்டியை நீக்கி வழிபடும் இயற்கை, ஐம்புலன்களையும் ஒருவழிப்படுத்தி ஆசையைப் பற்றறக் களைந்து இறக்கவரினும் தம் நிலைதிரியாத உண்மையே கடைப்பிடித்துள்ள பிருங்கிமுனிவர் ஒருவருக்கேயன்றி ஏனையோரான் முடியாது.

கண்ணுதற்கடவுள் காமனை எரித்தது குற்றமாகாதோ எனின்; காமன் தம்மை எதிர்த்து அகங்கரித்து வந்த சிவாபராதத்தை நீக்குதற்கும் அவ்வாறெதிர்த்தவர்கள் தண்டிக்கப்படுவரென்பதை உணர்த்துதற்குமாகவே மன்மதனை எரித்தருளினர் என்பதை உணர்ந்து கொள்க. இதனை ஸ்ரீமத் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்

> "அண்ணலை யெய்வ னென்று வினையவன் றுணிவிற் கூறித்
> தண்ணென வீண்டு வந்த செய்கையே சுட்ட போலும்."

என்பதனுல் உணர்த்தியருளினர். சிவபெருமான் வேண்டாமையில்லாத விமலன் என்பது குற்றஞ்செய்யாது அவன் சாரான இரதியை அழியாமையானும் (கந்தபுராணம் காமதகன: செ. கூறு) மீள அவனை எழுப்பித் தொன்மைபோல் அரசுரிமை முதலியன கொடுத்து இன்பஞ் செய்தமையானும் பெறப்படும். ஆகவே, பரமசிவன் பகையும் அன்புஞ் சிறிதுமின்றி எல்லாவுயிர்களுக்குமுள்ள கன்மங்களை அறிந்து அவற்றிற்கேற்ப முறைபுரிபவர் என்பது காண்க. இதனை ஸ்ரீமத் கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் காமதகனப் படலத்தில்,

> "பற்றேடிக லற்ற பரம்பொருளை
> யெற்றேமபல் செய்குவ திசனையும்
> மற்றேரென மின்னின் மதித்தனைபாற்
> சற்றேயவ னுற்ற றவிர்த்திடவே."

என மன்மதன் பிரமாவுக்குக் கூறிய பொருளையுடைய செய்யுளானும்,

"இகலுமன்பு மிறையுமின்றி எவ்வுயிர்க்கு முள்ளதோர்
புகுதிநாடி முறைமையினைப் புரிந்துசேர் பவர்க்குமேற்
றகுதிசெய்து கருணைகூர் சயம்பு........."

எனத் திருநந்திதேவர் காமனுக்குக் கூறிய பொருளையுடைய செய்யுளானும் உணர்த்தியருளினர்.

மன்மதபாணத்தினாற் றாக்குண்ணாதவர் பரமசிவனும் என்பது இச் சரிதத்தால் நன்கு தெளியப்பட்ட உண்மையாம். பரமசிவனார் காமபாணத்தாற் றாக்குண்ணாராயின் உமையை மணஞ் செய்திருக்கவேண்டாம் எனச் சிலர் ஆக்ஷேபஞ் செய்யின்; பார்ப்பதியின் மணப்பொருட்டுச் சிவபெருமான் தாமே இச்சையை மேற்கொண்டனரேயன்றிக் காமவசத்ததான இச்சையை மேற்கொண்டாரல்லர். அது காமதகனத்தின்பின்பே திருக்கல்யாணம் நிகழ்ந்தமையால் உணரப்படும்.

---

# தக்ஷிணாமூர்த்த தத்துவார்த்தம்

[தியாகவல்லி, திருச்சோபுரம் தேவஸ்தான ஸ்தானீகர்
சிவஸ்ரீ நாகரத்னக்குருக்கள் அவர்கள் எழுதியது.]

நன்மை விதைத்தால் நன்மை விளையும்
தீமை விதைத்தால் தீமை விளையும்.

நம்முடைய மனமானது நன்மை விதைத்தால் நன்மையும் தீமை விதைத்தால் தீமையும் விளையும் நிலமாயிருக்கின்றது. பெரியோர்கள் தங்கள் மனமாகிய நிலத்தை மிகவும் பாடுபட்டுத் திருத்தி, அதிலுள்ள வஞ்சகமாகிய கட்டையை வேரோடு களைந்தகற்றி, அன்பு என்னும் பாத்தியைக் கோலி, மெய் என்னும் எருவை யிட்டு, பத்தி என்னும் ஒப்பற்ற விதையை நட்டு, ஆர்வம் என்னும் நீரைப் பாய்ச்சி, சாந்தம் என்னும் வேலி இட்டு, ஐம்புலன்களாகிய பட்டிமாடுகள் பிரவேசியாதபடி தடுத்துப் பாதுகாப்பார்கள். அப்போது அப் பத்தியாகிய விதையிலிருந்து ஞானம் என்னும் முளை தோன்றி, கருணை என்னும் தளிர் உண்டாகும். பிறகு காமம், குரோதம் முதலிய களைகளைத் தோன்றுந்தோறுங் களைந்தெறிய அது செழித்து வளர்ந்து, காணினுங் கருதினுங் களிதரும் ஆராவின்ப அருங்

கனி தரும். இக் கனியைப் பெரியோர்கள் உண்டு சுகித்து இருமாந்திருப்பார்கள். சிறியோர் முயற்சியின்றியும், நாளை நாளையென்று நாள் கழித்தும், தங்கள் மனமாகிய நிலத்தை முற்றிலும் பாழாக்கி, காமக்காடு மூடவிட்டு, ஐம்புலவேடர் வசப்படுத்தி, இச்சையென்னும் விதையை விதைப்பார்கள். அதனால் அதில் எங்கும் நான், எனது என்னும் அகங்கார மமகாரங்களாகிய விஷம் பொருந்திய மரங்கள் அடர்ந்து முளைத்து வளர்ந்து, பொய்யாகிய கிளைகளை விட்டு, பாவமாகிய இலைகளைப் பரப்பி, கொடுமையென்னும் பூக்களைப் பூத்து, துன்பமாகிய காய்களைக் காய்த்து, மரணமாகிய பழத்தைத் தர, அதனை யுண்டு, நரகத்தில் வீழ்ந்து தங்களுக்கும் பிறர்க்கும் பயன்படாமல் அழிவார்கள்.

### தக்ஷிணாமூர்த்த தத்துவார்த்தம்

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.

இது பரஞ்சோதிமுனிவர் அருளிய திருவிளையாடற்புராணத்தில் உள்ளது.

(இதன் பொருள்:) சிவபெருமான் கல்லால நீழலின்கண்ணே தென்முகமாக எழுந்தருளியிருந்து, நான்கு வேதங்களையும், ஆறு அங்கங்களையும், வேதாந்தங்களையும் நன்கு அறிந்த வல்லவர்களாகிய சனகாதி நால்வருக்கும், வேத வேதாந்தங்களினால் தம்மையும் தலைவனையும் சந்தேக விபரீதமற உணரமாட்டாது மயங்கின மயக்கம் நீங்குதற்பொருட்டு, வாக்கினால் இத்தன்மைத்தென்று சொல்லக்கூடாத பூரணமாயும், வேதங்களினால் அறுதியிட்டுக் கூற முடியாததாயும், உயிர்ப் பொருள் உயிரில் பொருளாகிய எல்லாம் தன்னையின்றித் தனித்து நில்லாமையால் அவை யாவும் தானாகியும், ஆயினும், அவற்றுள் உயிர் போலப் பிறந்திறந் துழலுதலும், உயிரில் பொருள் போலத்

தோன்றிநின்றழிதலும் இல்லாமையால் அப் பொருள்களுக்கு வேருயும் இருந்த தனது சொரூபத்தை இருந்தவாறே திருமேனி கொண்டருளிய முறைமையில் வைத்துக் காட்டி, அவ்வுண்மையை வாக்காற் சொல்லாது அறிவுக்கறிவாய் நின்று அருளால் அறிவித்தனர். இப் பேருபகாரம் புரிந்த தக்ஷிணாமூர்த்தியை, நாம் ஆராய்ச்சி அறிவாகிய மனத்தால் நினையாது அநுபவ அறிவால் அறிந்தா பிறந்திறந்துழலுந் துன்பத்தை வெல்வார். என்றவாறு.

நான்மறையா றங்கமுதல் என்றதனுல் வேதாந்தமும் உடன் கொள்ளப்படும் கேள்வி வல்லார்கள் என்றதனுல் கேட்டும் மலவு நீங்காமை பெறப்படும். இருந்து காட்டி என்று இங்கே பொதுப்படக் கூறினுரேனும்; எவ்வாறிருந்து காட்டினுரென்பதை வேதத்துக்குப் பொருள் அருளிச்செய் படலத்திற் கூறுகின்ருர். அது வருமாறு:—

"சீதளப் பளிக்கு மேனியும் பளிக்குச்
செழுமலே பதித்ததுப் பன்ன
பாதமும் செவ்வாய் மலருமுக் கண்ணும்
பங்கயச் செங்கர நான்கும்
வேதபுத் தகமும் அமுதகும் பமுந்தன்
விழிமணி வடமுமெய்ஞ் ஞான
போதமுத் திரையுந் தரித்ததோர் தனிமைப்
போதன்முன் ருழ்ந்தெழுந் தேத்தா."

இதனுல் முயலகனை மிதித்த திருவடியொன்றும், வீராசனமான மற்ருெரு திருவடியும், வலப்பக்கத்திலுள்ள ஒரு திருக்கரத்தில் சின்முத்திரையும், மற்ருெரு திருக்கரத்தில் உருத்திராக்கமணிவடமும், இடப்பக்கத்திலுள்ள ஒரு திருக்கரத்தில் அமுதகும்பமும், மற்ருெரு திருக்கரத்தில் சிவஞானபோத புத்தகமும் துலங்க எழுந்தருளி இருந்தார் என்றவாருயிற்று.

இவ்வாறு கொண்டருளிய திருமேனிப்பாங்கின் தத்துவார்த்தமாகிய உண்மைப் பொருள் வருமாறு:—

சின்முத்திரை:—கரத்திலுள்ள ஐந்து விரல்களுள் நடுவிரல் முதலாகப் பின் மூன்று விரல்களை வேறு பிரித்து, சுட்டுவிரலைப் பெருவிரல் அடிப்பாகத்தில் அடங்கும்படி மடக்கி வைத்தலாம்.

பெருவிரல் ஏனைய நான்கு விரல்களோடுங் கூடித் தனித் தனி ஒவ்வொரு விரலையும் பொருந்துதற்கு உரிமையுடையதாயும் அவற்றின் வேறுமாயும் இருத்தலால் அது எல்லாமாயும் அல்லதுமாயும் நின்ற பதியைக் குறிக்கும்.

சுட்டுவிரல் பெருவிரலை உள்ளடக்கியும் நடுவிரலுக்கு உள்ளடங்கியும் இருத்தலால், அது ஆணவமலத்தினுள்ளடங்கிப் பதியைக் கீழ்ப்படுத்திப் பசுபோதமாய் நிற்கும் உயிரைக் குறிக்கும்.

நடுவிரல் பெருவிரலோடு பிரிப்பின்றி நிற்கும் சுட்டுவிரலைத் தன்னுள் அடங்கிநிற்றலால், அது பதியோடு பிரிப்பின்றி நிற்கும் உயிரைத் தன்னுள் அடக்கி வைத்திருக்கும் ஆணவமலத்தைக் குறிக்கும்.

அணிவிரல் நடுவிரலுக்குட்பட்டு இருத்தலால், அது ஆணவமலச்சேட்டையால் அநாதியே உண்டான விருப்பு வெறுப்பென்னும் மூலகன்மத்தைக் குறிக்கும். மூலகன்மத்தைப்பற்றிச் சிவஞானசித்தியார் உரையில் "கன்மமூ மூலங் காட்டி" என்றவிடத்து விரித்துக் கூறியிருக்கின்றோம். அவ்விடத்துக் காண்க.

கடைவிரல் அணிவிரலுக்குட்பட்டும் முற்பட்டும் இருத்தலால், அது விருப்பு வெறுப்புக்கு உட்பட்டும் முற்பட்டும் விளங்கும் மாயாகாரியங்களைக் குறிக்கும்.

ஆகவே, ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் நீங்க, உயிர் சிவபெருமான் திருவடி வியாபகத்துள் இரண்டறக் கலந்து நிற்றலை உணர்த்துவது சின்முத்திரையென அறிக.

அமுதகும்பம்:—மலநீக்கமும், திருவடி அடைதலாகிய சிவப்பேறும் என்னும் பயன் இரண்டும் வாய்ப்பதற்குச் சாதனம் சிவஞானமென்பதை உணர்த்துவது.

உருத்திராக்கமணிவடம்:—பாசஞான பசுஞானங்களில் நின்றும் நீங்கிச் சிவஞானத்தில் பயிலுங் காலத்தும் பழைய பழக்க வாசனையால் பாசக்கூட்டங்களைப் பற்ற நேரும். நேருங்கால்

அவற்றிற் செல்லாது சிவஞானத்தில் நிலைத்தற்பொருட்டுத் திரு ஐந்தெழுத்தைக் கணிக்கவேண்டும் என்பதை உணர்த்துவது.

முயலகனை மிதித்த திருவடி:—சிவப்பேறுபெற்ற சிவஞானிகள் தேகமுள்ள அளவும் ஜீவன் முத்தராய் வாழ்வர்; வாழுங்காலத்து சுற்றப்பார்த்து ஆணவமலம் தலையெடுக்காவண்ணம் அதனை அமிழ்த்துதற்குரிய சாதனஞ் செய்துவரல்வேண்டுமென்பதை யும் வருவரென்பதையும் உணர்த்துவது.

வீராசனம்:—ஜீவன்முத்தர் மலநீக்கத்திற்குரிய சாதனஞ் செய்து வருதலோடு மலம் நீங்கிய சிவனடியார்களோடு சிநேகம் செய்தல் வேண்டுமென்பதையும், சிவபக்தரல்லாதாரோடு இணங்காது இருக்கவேண்டுமென்பதையும் உணர்த்துவது. எவ்வாறெனின், முயலகனை மிதித்த திருவடியோடு மற்றொரு திருவடி சேர்ந்திருத்தல் மலம்நீங்கிய சிவபக்தர்களோடு சிநேக மாயிருத்தலையும், வீராசனம் சிவபக்தரல்லாதாரைப் பொருட் படுத்தாமையினையும் குறிக்கும் ஆற்றல் என்க. சிவபக்தரோடு சேர்ந்தோர் அல்லாதாரைப் பொருட்படுத்தாரென்பதை,

"ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டு
சிறுமான் ஏந்திதன் சேவடிக் கீழ்ச்சென்றங்
கிறுமாந் திருப்பன் கொலோ."

என்ற திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாக்கும் வலியுறுத்தும்.

சிவஞானபோதம்:—மூன்று திருக்கரங்களினாலும் இரண்டு திருவடிகளினாலும் உணர்த்திய உண்மைப்பொருளை இனிது விளக்குவது. வேதபுத்தகம் என்பது சிவஞானபோதமாகுமோ எனின், ஆதல். எவ்வாறெனின், கூறுதும். வேதம் என்பது அறிதற்கருமையுள்ளது. அது எந்தச் சமயத்தில் யார் யாருக்கு எதனை எதனை அறிவிக்கவேண்டுமோ அவற்றை அறிவிப்பதாகும். இங்கே சனகாதிமுனிவர்கள் வேதாந்தங் களை உணர்த்தும் மலைவு நீங்காமையால் அவர்களுடைய மலைவு நீக்கும் தகுதியையுடையதாய் இருத்தல் வேண்டும். அன்றியும் ஒரு நியாயாதிபதி சிவில், கிரிமினல் என்ற இரண்டு கோர்ட்டையும் நடத்துதற்கு உரிமையுடையவராயிருந்து, சிவில்கோர்ட்டை நடத்துங்கால் அதற்குரிய சட்டப்புத்தகத் தையும், கிரிமினல் கோர்ட்டை நடத்துங்கால் அதற்குரிய சட்

டப்புத்தகத்தையும் தன்பக்கத்தில் வைத்திருப்பது முறைமை. அவ்வாறே மூன்று திருக்கரங்களினாலும், இரண்டு திருவடிகளினாலும் உணர்த்தப்படும் விஷயங்கள் அடங்கிய புத்தகமே அதுசமயம் தமது திருக்கரத்தில் இருத்தல் வேண்டும். மலைவு நீங்குதற்பொருட்டு வைத்திருக்குங் காரணத்தினாலும், விஷயங்களை அடக்கி வைத்திருக்குங் காரணத்தினாலும், வேத புத்தகமென்பது சிவஞானபோதமே என்க. விஷயங்கள் அடங்கியிருத்தல் எவ்வாறெனின்;—

சிவஞானபோதம் பன்னிருசூத்திரங்களையுடையது. அவற்றுள்ளும் முன் ஆறு சூத்திரம் பொது வதிகாரம். பின் ஆறு சூத்திரம் சிறப்பதிகாரம். இது சாதனவியல், பயனியல் என இரண்டியல்களையுடையது. இதன் விரிவெல்லாம் சிவஞானபோதச் சிற்றுரை விளக்கத்துட் கூறப்பட்டிருக்கிறது. அவ்விடத்துக்காண்க. இவ்விடத்து வேண்டும் பொருளை மட்டும் கூறுதும். ஏழாஞ் சூத்திரம் அதிகாரி இயல்பு கூறுதலின், சனகாதிமுனிவர்களைக் குறிக்கும். எட்டாஞ் சூத்திரம் சிவபெருமான் குருவடிவாய்வந்து அனுக்கிரகித்தல் கூறுதலின், தக்ஷிணாமூர்த்தியைக் குறிக்கும். ஒன்பதாஞ் சூத்திரம் சிவஞானத்தை அனுட்டிக்கும் முறையும், திருவைந்தெழுத்தைக் கணிக்கும் முறையும் கூறுதலின், அமுதகும்பத்தையும், உருத்திராக்கமணி வடத்தையும் குறிக்கும். பத்தாஞ் சூத்திரம் மும்மலநீக்கம் கூறுதலின், சின்முத்திரையில் மூன்று விரல்களின் நீக்கத்தைக் குறிக்கும். பதினொராஞ் சூத்திரம் சிவபெருமான் திருவடி அடைதலாகிய சிவப்பேறு கூறுதலின், சின்முத்திரையில் பெருவிரலின் அடிப்பாகத்தில் சுட்டுவிரல் மடங்கி நிற்றலைக் குறிக்கும். பன்னிரண்டாஞ் சூத்திரம் சீவன்முத்தர் மலநீக்கஞ் செய்தலும், சிவனடியாரோடிணங்குதலும், திருவேடத்தையும், சிவாலயத்தையும் சிவனெனவே கண்டு வழிபடுதலும் கூறுதலின், முயலகனை மிதித்த திருவடியினையும், வீராசனமாய் அமர்ந்த திருவடியினையுங் குறிக்கும். வீராசனத்தால் இனம் பற்றித் திருவேடத்தையும், சிவாலயத்தையும் வழிபடுதல் கொள்ளப்படும். இவ்வாறு திருக்கரங்களினாலும், திருவடிகளினாலும் உணர்த்தப்படும் உண்மைப்பொருள்களைச் சிவஞான

போதமேயன்றி வேறெந்த நூல்களும் ஒருசேரத் தொகுத்துணர்த்துவதில்லையென்க.

கல்லாலநீழல்:—சாதனஞ்செய்யுங் காலத்தும், சிவானுபவம் கைவரப்பெற்று ஜீவன்முத்தராய் வாழுங் காலத்தும் மனத்திற்கும் சரீரத்திற்கும் விருப்பு வெறுப்பு முதலிய வெப்பந் தருகின்ற இராசத தாமத குணங்களைச் சாராது சாந்தத்தைத் தரும் சத்துவகுணத்தைச் சார்ந்திருக்கவேண்டுமென்பதை உணர்த்துவது.

தென்முகம்:—அகோரமுகமாகும். அகோரம் என்பது கோரமின்மையைக் குறித்து, அனுக்கிரகத்தை உணர்த்துவது.

முடிவுரை

தக்ஷிணாமூர்த்தியாய்க் கல்லால்நீழலின்கண் சிவபெருமான் எழுந்தருளியிருந்த திருமேனிப் பாங்கின் உண்மைப் பொருள் இதுவென உணர்த்துவதே இவ் வியாசத்தின் கருத்தென்பதூஉம், சின்முத்திரை அமர்ந்த திருக்கரம் எல்லாமாயும் அல்லதுமாயும் நிற்கும் தனது உண்மையினையும், அம் முத்திரை மலநீக்கமும் சிவப்பேறுமாகிய பயனையும் உணர்த்துமென்பதூஉம், அமுதகும்பம் சிவஞானத்தையும், உருத்திராக்கமணிவடம் திருவைந்தெழுத்துக் கணிக்கவேண்டுமென்பதையும், முயலகனை மிதித்த திருவடியும் வீராசனமாய் அமர்ந்திருக்குந் திருவடியும் சீவன்முத்தர் இயல்பையும் குறிக்குமென்பதூஉம், சிவஞானபோதம் மூன்று திருக்கரங்களினாலும் இரண்டு திருவடியினாலும் உணர்த்திய பொருளை விளக்குமென்பதூஉம், கல்லாலநீழலும் தென்முகமும் சாந்தத்திற்குச் சாதனத்தையும் அனுக்கிரகத்தையும் உணர்த்துமென்பதூஉம் பிறவுமாம்.

தம்மால் இயன்ற அளவு பல வழிகளிலும் உண்மையாகவும், ஒழுங்காகவும் தங்களால் நடத்திவரும் சைவசாஸ்திர பரிபாலனம் சமயசம்பந்தமான மாதாந்தசஞ்சிகைக்கு உதவி புரிந்துவரும் போஷகர்களும் அபிமானிகளும் மற்றுமுள்ளாரும் ஸ்ரீ நடராஜப்பெருமானார் திருவருளால் சகல ஐசுவரியமும் பெற்று நீடூழி வாழுமாறு அவ்விறைவன் திருவடிகளைத் தியானிக்கிறேன். நமஸ்காரம்.

---

# உபநிஷத் கதை II

[சிவபுரம்: சிவஸ்ரீ சுவாமிநாத சிவாசார்யர் அவர்கள்]

(முற்றொடர்.)

கஷ்டம்! இவன் மிகுந்த சாமர்த்தியவான். வயதினால் குழந்தையாய் இருந்தபோதிலும் காரியத்தினால் சாமர்த்தியம் உள்ளவர்களையும் பரிகசிக்கிறான். இவன் சமயம் வந்ததென்று எனது வீட்டின் ரகஸ்யத்தையும் வெளிப்படுத்துகிறான். இருக்கட்டும்; நானும் வார்த்தையினாலேயே இவனுடைய மனோரதத்தை நிரப்புகிறேன். இவனுடைய மனதையும் பரீக்ஷிக்கிறேன் என்று மனதில் எண்ணமிட்டுக்கொண்டு, அவனால் பிரார்த்திக்கப்பட்ட விஷயம் அறிய முடியாது என்றும் நல்லதான மற்றொன்றைக் கேளென்றும் கூறினான்.

அதைக் கேட்ட நசிகேதஸ், அறிய முடியாதென்று கூறினதால் அதிலேயே அதிக ஆவலுடையவனாய் மறுபடியும் விநயத்துடன், அப்படியானால் இந்த வரன் சம்சயத்திற்கு விஷயந்தான். தானாகவும் அறிந்துகொள்ள முடியாது. தங்களைப் போல் இதைத் தெரிவிப்பவரும் கிடைப்பது அரிது. ஆதலால், பிறருக்குக் கிடைக்காததான இந்தப் பாக்கியத்தை விட்டு, எல்லோருக்கும் சுலபமான வரனை எப்படிக் கேட்பேன். அருள் புரி. எனது அபவாதங்களைப் பொறுத்துக்கொள். நான் இப்பொழுது கேட்டதையே கூறு என்று கூறினான். இதைக் கேட்ட யமன் நசிகேதஸை ஏமாற்ற எண்ணங்கொண்டு முகத்தோற்றத்தில் அனுக்ரஹபுத்தியைக் காண்பிப்பவனாய்,

ஶதாயுஷ: புத்ரபௌத்ராந் வ்ருணீஷ்வ
பஹூந் பஶூந் ஹஸ்திஹிரண்யமஶ்வாந்।
பூமேர்மஹதாயதநம் வ்ருணீஷ்வ
ஸ்வயஞ்ச ஜீவ ஶரதோ யாவதிச்சஸி॥

ஓ! நசிகேதஸ்ஸே! நீ சிறுவன். உலகநடத்தையை அறியமாட்டாய். ஏனெனில், உபயோகமற்றதாயும் மிகச் சிறியதாயும் உள்ள விஷயத்தில் தலையிட்டுக்கொண்டு புருஷர்களால் விரும்பக்கூடியவைகளைத் தள்ளுகிறாய். உலகத்தில் சிரஞ்ஜீவிகளான புத்திரர்கள், பரிஜனங்கள் குதிரை முதலியவைகள் ஐச்வர்யங்கள். இதுபோன்ற சுவர்க்கபோகத்துக்குரிய பதார்த்தங்கள் அநேகம் இருக்கின்றன. அறிவாளிகளுடைய மனது இவைகளில் ரமிக்கின்றன. இவைகளுள் எதாவதொன்றை அடைவார்

களையானல் தன்னைக் கிருதார்த்தராக நினைத்துக்கொண்டு சுவப்னத்திலும் வேறொன்றை நினைப்பதில்லை. இவ்வாறிருக்க, உனக்கு மாத்திரம் அடிக்கடி இப்படி மோகம் வேண்டாமல், கிடைக்காததாயும் ஆத்மஹிதங்களாயும் உள்ள பொருள்களை விட்டு உபயோகமற்றவைகளில் ஆக்ரஹம் ஏன் உண்டாயிற்று? லௌகிகங்களான கடைபை விட்டு ஆத்மஹிதங்களான புத்ர பௌத்திர தன ரத்தினம் முதலியவைகளைக் கேள். என் அனுக்கிரகத்தினல் கிடைத்தவைகளைக் கிரகித்துக்கொள். பின் வெகுகாலம் சுகமாக இரு. இவைகளிலும் உனக்கு விருப்பமில்லையேல், சாதாரண ஜனங்களுக்குத் துர்லபமான வேறு இஷ்டமுள்ளவைகளைப் பிரார்த்தி. என்னது அனுக்கிரகத்தினல் உனக்குக் கிடைக்காதது ஒன்றுமில்லை. இதைக்காட்டிலும் விசாரிக்கவேண்டியது ஒன்றுமில்லை. புத்திசாலியான ஒரு மனிதன் மிகச் பரிசீலனைசெய்தும் இவைகளையே விரும்புகிருன். இப்பொழுது பெரியோர்களுடைய வழியைப் பற்று. என்னல் கொடுக்கப்படும் சுகபோக்கியங்களான வஸ்துக்களைப் பெற்றுக்கொள். மரணசம்பந்தமான கேள்வியைக் கேட்காதே என்ருர்.

இவ்வாறு எமராஜனல் கூறப்பட்டவனுயிருந்தும் நசிகேதஸ் தான் நினைத்த காரியத்திலிருந்து கொஞ்சமும் மனதை நழுவவிடவில்லை. பிறருக்குச் சுலபமாகக் கிடைக்காத அவ் அந்தகனின் அன்புள்ள வார்த்தையினல் ஆச்சரியமும் அடையவில்லை. ஆனல், நீருண்ட மேகத்தின் கர்ஜனை போல் கம்பீரமான குரலால் வினயத்தோடு ஹே! எமராஜனே! தங்களால் கொடுக்கப்படும் பதார்த்தங்கள் ரமணீயங்களாயினும் சில காலமுள்ளவைகள்; அழிவற்றவைகளல்ல. அவைகள் தங்களுடைய அருளினல் கொடுக்கப்பட்டதால் நூறு வருஷம் இருப்பினும் அற்பமே. ஆதலால், தங்களால் கொடுக்கப்பட்டபோதிலும் புத்திமான்களால் அங்கீகரிக்கத்தக்கதன்று. அவைகளால் எனக்கு ஒன்றும் பிரயோஜனமில்லை. எனக்குக் கொடுக்கும் வரன் அதுவே.

யஸ்மிந்நிதம் விசிகித்ஸந்தி ம்ருத்யோ
யத்ஸாம்பராயே மஹதி ப்ரூஹி நஸ்தத்

𑌯𑍋𑌽𑌯𑌂 𑌵𑌰𑍋 𑌗𑍂𑌢𑌮𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑍋
𑌨𑌾𑌨𑍍𑌯𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌚𑌿𑌕𑍇𑌤𑌾 𑌵𑍃𑌣𑍀𑌤𑍇 ॥

ஹே !யமராஜனே! பரலோகவிஷயத்தில் இருக்கென்றும் இல்லையென்றும் சந்தேகம் எல்லோருக்கும் இருக்கிறது. மேன்மை உள்ள விஷயத்தையே எனக்குக் கூறு. ரகசியமாயும் ஆத்ம விஷயமாயுமுள்ளதைத் தவிர வேறொன்றை நசிகேதஸ் கேட்க மாட்டான். தாங்கள் வரம் கொடுப்பீர்களேயானால் இதைத் தான் கொடுக்கவேண்டும் என்றான்.

இவ்வாறு உறுதியாயிருக்கும் நசிகேதஸ்லை திருப்ப முடியவில்லை. விவேகமென்ற ஜலத்தினல் அலம்பப்பட்டு இரத்தினக்கண்ணுடிபோல் விளங்கும் நசிகேதஸ்லினுடைய மனதில் எவ்வளவு முயற்சியினலேயும் ஆசை, ரஜோகுணம் இவைகளை உண்டுபண்ண முடியவில்லை. அப்போது யமராஜன் நசிகேதஸ்லை சிஷ்யனக அடைய எண்ணிச் சந்தோஷத்தினல் கொஞ்சம் மலரச்செய்யப்பட்ட முகத்தினல் அருளை வெளிப் படுத்துகிறவனய், உலகத்தில் மிகவும் ஆராய்ச்சிசெய்யும் காலத் தில் புருஷனல் பிரார்த்திக்கத்தக்கது, ச்ரேயஸ் ப்ரேயஸ் என்னும் இரண்டே. அதில் ச்ரேயஸ் என்பது நித்தியநிரதி சயானந்த சுகரூபமான மோக்ஷம். ப்ரேயஸ் என்பது அநித்தியமாயும் சாதிசயமாயும் இவ்வுலகிலும் அவ்வுலகிலும் சுகத்தைக் கொடுக்கும் தன்மையுள்ளது.

புருஷர்கள் பூர்வஜன்மத்து விசித்திர கர்மவசத்தினல் தன்னுடைய இஷ்டத்திற்குத் தக்கவாறு இவைகளுள் ஏதோ ஒன்றைக் கிரகிக்கிருர்கள். எவ்வளவு சாமர்த்தியமுள்ளவனும் இவ்விரண்டையும் கிரகித்துக்கொள்ள முடியாதவனகிருன். இதில் எவனெருவன் முன் ஜன்மத்து முதிர்ந்த புண்ணியவசத்தினல் விவேகம், வைராக்கியம் என்பவை பொருந்தி மனதினல், சமீபத்தில் வந்ததாயிருந்தபோதிலும் ப்ரேயஸை விட்டு சிரேயஸையே அடைகிருனே அவனே உலகபந்தத்தினல் விடுபட்டவனய்ப் பாதத்துவனன் பரமேச்வரனை யடைந்து மிகவும் நித்தியசுகத்தை யடைகிருன். யாவனெருவன் அற்ப பாக்கியனே அவன் முன் செய்த கன்மவசத்தினல் சம்சாரசுகத்தில் ஆசையுள்ளவனய் அதையே கொண்டாடுபவ

னுப் உன்மத்தன் போல அமுதம் போன்ற ச்ரேயஸை விட்டு, விஷத்திற்குச் சமானமான ப்ரேயஸை அடைகிறான். அவன் தங்கத்தை விட்டுக் காசத்தில் ஆசைப்படும் குழந்தைபோல் பரமபுருஷார்த்தத்தை விட்டு அநர்த்தத்தைத் தேடிக்கொள்ளு கிறான். ஓ நசிகேதஸே! என்னால் ஏமாற்றப்பட்டவனாயிருந்த போதிலும், நீ நன்றாக யோசித்துச் சுவர்க்காதி சுகங்கள் பிரயோஜனமற்றன என்றும், பரலோகம் என்பதுதான் மேலானது என்றும் மனதில் நிச்சயம் செய்துகொண்டு, அதை நன்றாய் அறிந்துகொள்ள மிகக் கஷ்டத்துடன் முயற்சியுடையவனாய் இருக்கிறாய்.

இப் பரலோகம் அநேகமாய் எல்லோருடைய மனதிற்கும் எட்டுவதில்லை. சிலர் அறிவின் குறைவால் பரலோகமென்று ஒன்று இருப்பதென்றும் நினைப்பதில்லை. வேறு சிலர்க்குப் பணத்தின் மோகத்தினால் ஹிதத்தைத் தெரிந்துகொள்ளாமல் ஆசையால் சூழப்பட்டுப் பரலோகத்தில் சிரத்தை ஏற்படுவதில்லை. மற்றும் சிலர் இதுவே பரலோகமென்றும், வேறு ஒன்று இல்லை என்றும் அதில் முயற்சிப்பதில்லை. முயற்சி இல்லாவிடில் பிறப்பு இறப்பு இவைகளை அடைந்து என்னிடம் வருகிறார்கள்; மறுபடி பிறக்கிறார்கள்; மறுபடி இறக்கிறார்கள். அவர்கள் ஒருபொழுதும் சிரமபரிகாரம் அடைவதில்லை. உன் போன்றவர்கள் ஆயிரத்தில் ஒருவரே. சிலர் பாக்கியவசத்தினால் சத்குருவை அடைந்தும், தத்துவங்களைக் கேட்டும், புத்தியின் குறைவாலோ ஜன்மாந்தர தோஷத்தினாலோ ஆத்மாவை அறிந்துகொள்வதில்லை.

ஹே! நசிகேதஸ்ஸே! உனக்கு ஆத்மவிஷயத்தைக் கூறுகிறேன். ஆகமத்தை விட்டு, தர்க்கத்தில் உன் புத்தியைக் கொண்டுபோகக்கூடாது. இது ஆகமஞான ஆசார்யராலேயே உபதேசிக்கப்படுதல்வேண்டும்.

இவ்வாறு மதுரமான வார்த்தைகளால் நசிகேதஸ்ஸைச் சந்தோஷிக்கச்செய்து, ஆத்மவித்தையைக் கொண்டாடி, அதை அடையவேண்டிய உபாயத்தையும் கூறிவிட்டு யமராஜன் மௌனமடைந்தான்.

---

## ஓர் அறிவிப்பு

மயிலாப்பூர் ஸ்ரீமாந் சே. வே. ஜம்புலிங்கம்பிள்ளை அவர்கள் 'சைவசாஸ்திரபரிபாலனம்' தொகுதி. உ, பகுதி எ-ல் 'சிவபரத்துவநிச்சயம்' என்ற என்னுடைய நூலுக்கு மதிப்புரையொன்று எழுதி வெளியிட்டுள்ளார்கள். அவர்களுக்கு என் வந்தனம் உரியதாகுக. ஆனால், அவர்கள் அம் மதிப்புரையில் என்னை 'இவர் சோற்றூர்ச் சமஸ்தானக் கவிராய பரம்பரையினர்' என்கிறார்கள். அச்சுப்பிழையினால் சேற்றூர் சோற்றூராயிற்று. 'பரம்பரையினர்' என்பதற்கு அவர்கள் என்ன பொருள் கொள்கிறார்களோ? அது எனக்குத் தெரியாது. கால்வழியினர் என்ற பொருள் கொள்வார்களானால் நான் அப்படியல்லேன் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். என் தந்தை முதலிய என் மூதாதையருள் யாரும் சேற்றூர்ச் சமஸ்தானத்திற் கவிராயராயிருந்திலர். அச்சமஸ்தான வித்துவான்களுள் ஒருவராய் இருந்த ஸ்ரீமாந் மு. அருணசலக் கவிராயர் அவர்களுக்கு மகள்வயிற்றுப் பேர்த்தியை நான் மணஞ்செய்துகொண்டேன். அவ்வளவே.

ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை.

# சரித்திரத்துறையும் சைவசமயமும்

[ஸ்ரீமான் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை அவர்கள் எழுதியது.]

[இந்தக் கட்டுரையின் முதற் பகுதி இவ் வெளியீட்டில் வந்துள்ள அளவில் 'சமயஞானம்' என்ற பத்திரிகையில் சைவன் என்ற கைச்சாத்துடன் 1927-ல் வெளியாயிற்று. அடுத்தபகுதி எந்தப் பத்திரிகையிலும் வெளியாகவில்லை. இப் பத்திரிகையில் முழுவதையும் வெளியிட நான் உத்தேசித்துள்ளேன். இம் முதற்பகுதியின் அடிக்குறிப்புகள் சமயஞானப் பத்திரிகாசிரியரவர்கள் எழுதியவை. அடுத்தபகுதிக்கு இப்பாலன ஆசிரியரவர்கள் வேண்டுமிடங்களில் அத்தகைய குறிப்புக்கள் எழுதின், நான் அவற்றை வரவேற்று அவர்களுக்கு வந்தனஞ்செலுத்துவேன்.]

தமிழ்நாட்டுப் பழங்கால சரித்திரத்தை அறிந்து இன்புறுவதில் நமக்கு விருப்பம் மிகவுண்டு. ஆனால், அவ்வக் காலத்துப் பெரியார் அதனைக் கோவைப்பட எழுதிவைத்திலர். ஆகலின், இக்காலத்துப் புலவர் பலர் அத்துறையில் இறங்கி அதனை ஆழம்பார்த்துவருகின்றனர் அவருக்கு ஆதாரமாக நிற்பவை கல்வெட்டு, காசு, பட்டயம், அவ்வக் காலத்தார் எழுதிவைத்துப்போந்த குறிப்பு, இலக்கியம், கர்ணபரம்பரை

முதலியன. இவைகள் பெரும்பாலுஞ் *சுந்தோபசுந்தநியாயத்தில் நிற்கின்றன; புதியனபுதியனவாகத் தோன்றுகின்றன. அன்றியும், ஆராய்வோரது உட்கிடை அவர் எழுதுஞ் சரித்திரத்திற் கலக்கவுஞ்செய்கின்றது. உள்ளதை உள்ளவாறே உரைத்தல்வேண்டுமென்ற விருப்பினரும் மிகச் சிலர். ஆகலின், இப்பொழுது எழுதப்படுஞ் சரித்திரக் குவியல் ஒன்றோடொன்று எதிரிட்டுக் கிடப்பதோடு, காலந்தோறும் மாறிக்கொண்டும் வருகின்றது. இத்துறை தன் குழவிப்பருவம் நீங்கி முற்றுப்பேறடையும் வரை பிறிதொருதுறை ஆராய்ச்சிக்குச் சிறிதும் அரண்செய்வதில்லை.

ஆனால், தற்காலத்துச் சைவருட் பலர், கான்யாறு பெருக்கெடுத்தோட அதனிடை அகப்பட்டு †அலமரும் மான்கூட்டத்தின் ‡நீரராய் நவீன நாகரிகத்தில் மொத்துண்டு தம்மைத் தாமே மதித்து, அம்மதுகைமேலீட்டால் தமதாராய்ச்சி சைவசந்ததிகட்கு இத்துணைப் பொல்லாங்கு சூழுமென்பதை யோராராய், தமது உள்ளமென்னும் எருக்குழியில் முளைத்து வெளிப்போந்தவற்றையெல்லாந் 'தமிழ்க்கிழவரது பழஞ் சரித்திர'மென்று பல புத்தகங்கள் வெளியிட்டுள்ளார். இத்தகையாருக்குச் சைவவிரோதமான புதுக்கொள்கை, மேனாட்டாசாரம் முதலியவற்றிலிருக்கும் பிரேமை இல்லொழுக்கிறந்த பெண்டிர்க்குத் தானுந் தாங் காதலிக்குஞ் சோரர்மாட்டிராது. ஆகலின், அவர் தமிழ் நாட்டின் எதிர்கால இன்பவாழ்வுக்கு அப் புதுமைகளே பெரிதுஞ் சாதகஞ் செய்யுமெனக் கருதிக்கொண்டு, அவைகளை நம் மக்களிடைப் பரப்புமாறு 'பழந் தமிழர்களும் அவைகளைத் தழுவியுள்ளார்கள்' என்று துணிந்து விபரீதம் பேசுவர். இன்னும் அவர் தமக்கு வேதசிவாகமம், சைவாசாரியர், சைவாசாரம், சைவமடாலயம் முதலியவை எதிர்செய்து நிற்குமாயின், அவைகளை நிந்தித்தெழுதக் கொஞ்சமும் அஞ்சார். சரித்திரத்துறை நமது நாட்டுக்குப் புதிதாகலின், அவர் நுழைப்பதையெல்லாம் அதுவும் ஏற்றுக்கொள்ளும் இயல்பினதாயிற்று. சமயத்துறையாகிய பசும்பொன்னின் செழுமையை அளந்தறியத் தாமெழுதுஞ் சரித்திரத்துறையாகிய செக்குலக்கையே உரையாணி யென்பது அவரது தீர்ந்த முடிவு. அதாவது: சரித்திரத்துறைக்குப் பொருந்தாத சமயக்

---

*திலோத்தமையென்னும் பெண் காரணமாகச் சுந்தனால் உபசுந்தனும், உபசுந்தனால் சுந்தனும் மாண்டொழிந்தது போன்ற நெறி: இந்த நியாயம் கல்வெட்டு, சாசு முதலியவற்றுள் ஒன்றோடொன்று பொருந்தாமல் மாறுபட்டு ஒன்றனை மற்றொன்று ஒழிக்குமிடத்துப் பிரயோகிக்கப்படுகிறது.

† அலமரும் - சுழலும். ‡நீரர் - தன்மையுடையவர்.

கொள்கையை நிராகரித்தல்வேண்டுமென்பது அவர் கருத்தென்க. இனி, அவரெழுதியவற்றட் சிலவற்றைத் *தாலிபுலாக நயம்பற்றி ஈண்டு எடுத்து விவகரித்தொழிப்பாம்.

'பழந்தமிழர் சிவனென்னும் பெயரால் கடவுளை வணங்கிவந்த தில்லை'யென்று இப் புதிய துறையார் கரைவர். பழந்தமிழரது சைவாசாரம், சிவபத்திகளைத் தெரிக்கும் விரிவான பழைய சைவத்தமிழ்நூல் ஒன்றுயினும் இப்போது காணப்படவில்லை. ஆகலின், அத்துறையார் சமயநூலல்லவாகிய †தொல்காப்பியம், ‡மணிமேகலை முதலிய வேற்றுத் துறை நூல்களில் ஆண்டாண்டு இடைப்பிறவரலாகவும், இயைபு குறித்தும் வந்துள்ள ஏகதேசப் பொதுவசனங்களை வைத்துப் பழந்தமிழரது சைவத்திறத்தை யளவிட்டு, மருத்துவத்துறையை வைத்து வழக்குத் துறையை யளவிடுவதோர் சழக்குநெறிப்பட்டார். உண்மையில் பழந்தமிழர்மாட்டுச் சிவவணக்கமில்லையாயின், அவர் 'விச்சைநூல் பல கற்' றப் பிறப்பு, செல்வம் முதலியவற்றுற் சிறப்புற்றிருந்தாராயினும் 'சிவன் அருள் விரவாக் கொச்சையோ'ரென்றும், 'சிவநிறை கல்வி சாலாச் சிறிய'ரென்றும் எம்மாற் கடிந்தொதுக்கப்படுவர். ஆனல், இப் புதிய துறையார் தம் புதுமைகளையே நுழைநூலாக்கி எடுத்தாளும் அவ்வேக தேசப் பொதுவசனம் முதலிய ஆதாரங்கள் எமது மூதாதைகளது சிவநிறைவனைத்தையும் அளக்குங் கருவிகளாதல் எவ்வாற்றுனுமில்லை. ஆகலின், சைவநலங்கனிந்த இடைக்காலத்துத் தமிழ்ப்பெரியாரது,

---

* தாலிபுலாகநயம்—ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு பருக்கையைப் பதம் பார்த்து அறிவதுபோன்ற நெறி. முற்றிலும் பார்த்தறிவதற்குப் பதிலாக ஏகதேசத்தைப் பார்த்து முழுவதையும் தீர்மானிக்கும்போது இந்த நியாயம் வழங்கப்படுகிறது.

† தொல்காப்பியம் இப்பொழுதுள்ள சிறந்த தமிழிலக்கணநூல். இதனை இயற்றியவர் அகத்தியமுனிவரின் மாணுக்கரும் சமதக்கினி முனிவரின் புதல்வருமாகிய தொல்காப்பியர். இவர் இயற்பெயர் திரணதூமாக்கினி.

‡ மணிமேகலை - இது பௌத்தசமயக் கோட்பாடுகளை எடுத்துச் சொல்லும் நூல். இது தமிழிலுள்ள ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று. இதனை இயற்றியவர் கூலவாணிகன் சாத்தனுரெனப்படும் சீத்தலைச்சாத்தனுர்.

* 'பாண்டிநாடே பழம்பதி'
† 'தமிழன் கண்டாய்'
§ 'தலைச்சங்கப் புலவனார்'
‡ 'பழைய வைதிக சைவம் பாக்கவே'

என்றின்னோரன்ன எண்ணிறந்த வச்சிர வசனங்களை வைத்து, எமது முதுதமிழர் தமிழ்நாட்டுக்கும் தமிழ்மொழிக்கும் உரிய சிவத்தையே வழிபட்டும், அச் சிவத்தோடு சம்பந்தமாய சைவசமயத்தையே தழுவியும் உய்ந்தனரென்று யாங் கூறி, அம் முதுமக்களை வந்தித்து வாழ்வேம்.

'சிவாலயங்கள் இப்போது அமைந்துள்ளவாறு பழங்காலத்தில் தமிழ்நாட்டில் அமைந்திருக்கவில்லை' யென்றும், 'மரமும் அதனடியிற் சிவலிங்கமூர்த்தியுமாகவே அமைந்திருந்தன'வென்றும் இப் புதிய துறையார் பிதற்றுவர். இப்போதுள்ள ஆலயப் பெருங் கட்டடங்களையெல்லாம் இடித்துத் தரைமட்டமாக்கிவிட்டு, தம் மனம் போனவாறு வழிபாடு நிகழ்த்தவேண்டுமென்பது அவரது கருத்துப் போலும். சுயம்பு மூர்த்திகள் முளைத்தெழுந்த காலத்தில் இப்போது காணப்படுங் கோவிற் பெருங் கட்டடங்களெல்லாம் ஒருங்கு முளைத்தெழுந்தனவென்று எந்த மடவோனுங் கொள்ளமாட்டான். காடு நாடாகுங் காலத்திலெல்லாம் அக் காட்டிலுள்ள சுயம்புமூர்த்திகளுக்கும் பிரதிஷ்டாமூர்த்திகளுக்கும் ஆலயங்கள் அதிவிமரிசையாக அமைத்தல்வேண்டுமென்பதும், அவ்வாறு அமைப்பது ராஜனையும் ††ராஷ்டிரத்தையும் வாழ்விக்கும் பொருட்டென்பதும், ‡‡ 'எக் கோயிலில் எவ்வாகமத்தின் முறையே பிரதிட்டை செய்யப்பட்டது அக் கோயிலுக்கு அவ்வாகமத்தின் முறையே பூசை விழா நடாத்துக'வென்பதும், ** 'மாறிச் செய்யிற் குற்ற'மென்பதும் சிவாகமக்கட்டளை. முதுதமிழர் அவ் விதியை மதியாது நின்றிலர். நின்றார் என்று கூறுவார் கூறினும், யாம் அவ்வாணையைக் கடைப்பிடித்து அசையாது நிற்பேம். ஆனால்,

§§'அன்னதோர் கயிலை நாப்ப ணம்பொனின் சுடர்மேல் கொண்ட
நன்னெடுஞ் சிமயத் தோங்க னவையொரீஇ நண்ணிற் றென்னக்
கன்னியங் காப்பு மேவிக் கதிர்மணிக் கற்றை சுற்றப்
பொன்னெடுங் கோயி லொன்று பொலிவொடும் பொருந்திற் றன்றே'.

---

* திருவாசகம்.
† திருநாவுக்கரசர் தேவாரம்.
§ பெரியபுராணம்.
‡ கோயிற்புராணம்.
†† ராஷ்டிரம் - தேசம்.
‡‡ ஸ்ரீ சிவஞானபாடியம் சிறப்புப்பாயிரவுரை.
** ஸ்ரீசிவஞானமாபாடியம் சிறப்புப்பாயிரவுரை.
§§ கந்தபுராணம்.

திணிகதி ராரந் தன்னிற் சிறந்தவச் சிரத்திற் செக்கர்
மணிதனின் முழுநீ லத்தின் மற்றைய வெறுக்கை தன்னிற்
பணிபட வருளாற் றூனே பலித்திடு சிகர மாதி
யணியினுக் கணியாய்ப் பல்கு மாலயச் சூழ லெங்கும்.'

என்று திருக்கயிலாயத்துக் கோயிலும் வர்ணிக்கப்பட்டுள்ளது.

‡'எழ்நிலை மாளிகை சூளிகை சாளர மேரார்சீர்
வாழ்மதி றோரண வாயில்க டோரணி மாவீதி
சூழ்வுறு மேருவி னேர்பல கோவிய சோழேசன்
றூழ்வுடன் மாதவர் யாரையு நீள்குடி சார்வித்தான்.'

என்றபடி தில்லைக்காட்டைச் சிதம்பரநகரியாக்கிய இரணியவர்ம சோழேசர் அக்காட்டு மூர்த்தியாகிய ஸ்ரீ மூலட்டானேசுரருக்குப் 'பொன்' தன்மயமா மொளிராலய மொன்று' சமைப்பித்து 'நூலின் வைத்த முறை' பல திருவிழாக்களுஞ் சிறக்கச் செய்தனர். ஆகலின், தமிழ்ப் பழம்பெரியார் காடு திருத்தி நாடாக்கியவுடனே கண்ணுதற் பெம்மாற்கு விண்ணிழி விமானமென்னக் கோயில் பல சமைத்தே ஆகமவழிப் பூசை விழா முதலியன ஆசைகொண்டமட்டும் நடாத்தி உய்ந்தனரென்று யாங் கூறி அன்னாரை வந்தித்து வாழ்வேம்.

'வடமொழிக்கணுள்ள § இருக்காதி வேதங்கள் நான்கும் மக்கள் வாய்மொழியே'யென்று இப் புதிய துறையார் கூறி வரம்பழிவர். மடியை யுருவிப் பாலைக் கறப்பது பரம்பரை வழக்காயிருப்ப, புதுமை என்னும் மதிமயக்கால் மதிமயங்கிப் பிறிதோராற்றால் அதனைக் கறக்கக் கருதிக் காலையும் வாலையும் உருவி யுருவிக் கைசோர்ந்து, இறுதியில் அப் பசுவையே அறுத்துக் குருதியை யன்றிப் பாலைக் காணாய், இப் பசுவிற் பாலில்லையென்று துணியுங் கோக்கொலையாளர் போன்று *வேதப்பசுவைத் தம் புதுத்துறைக் கொடுவாளாற் கொன்று ஆராயும் இந்தப் † பிராகிருதரை

---

‡ கோயிற்புராணம் இரணியவன்மச்சருக்கம்.

§ இருக்காதி—இருக்கு முதலியன. அவையாவன: இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்பன.

* 'வேதப்பசு' என்றது 'வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ, ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு, நெய்யி னுறுசுவையாம் நீள்வெண்ணெ மெய்கண்டான், செய்ததமிழ் நூலின் றிறம்' என்ற வெண்பாவிற் கூறப்பட்டது.

† பிராகிருதர் - நூல்களைக் கற்றற்குரிய அறிவும் ஆற்றலும் காதலும் இல்லாதவர். மிருகேந்திராகமம்.

**'தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்'

§'முனிவர் உயர்புடையதனையு மிழிபுடையதனையும் ஒப்ப விலக்குப'

என்னும் பொய்யாமொழிகட்கு ஏற்பச் *சாமுசித்தர்களோடு விலக்குதல் எமது சடன். பொருளுண்மை தேரும் அறிவும் ஆற்றலும் காதலும் மிக்க இடைநின்ற ‡வைநயிகராகிய யாம

†'வேதமாவது மந்திரம், அருத்தவாதம், விதிவாக்கியம் என மூவகைப்பட்டுப் பிறவாக்கியங்களைப் பற்றுது தானே பிரமாணமாகி, விமற்சாருக்கன்றிப் பிறர்க்கறியப்படாத மெய்ப்பொருளினையுடைத்தாய், ஈசுரனையே அறிவிப்பதாம்.'

†'வேதவாக்கிய முழுதும் பிரமாணமே. வேதத்தின் வேறாய நூல்கள் அதனோடு விரோதியாதவழி, ஆக்கியோர் தாரதம்மியத்துக்கேற்பப் பிரமாணமாம்.'

$ எல்லா உயிர்கள்மாட்டும் பேரருளுடைய பரமசிவனாற் செய்யப்பட்டமைபற்றியே வேதங்களுக்குப் பிரமாணமுண்மை கொள்ளப்படும். என்னுஞ் **சத்தியஞானதரிசனிகளது ஆணைக்கடங்கி அவர்கள் காட்டிய முறையாற் பொருள் கொண்டு இருக்காதி வேதங்களைச் சிவவாக்கே என விசுவசித்து அவைகளை வந்தித்து வாழ்வேம்.

'திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், சிவஞானசுவாமிகள் முதலியோர் தமிழ்நாட்டிற் சரித்திரத்துறை மிக்கு விளங்காத காலத்தில் அவதரித்தமையால் வடமொழி வேதாகமங்களைச் சிவவாக்கெனச் சம்மதித்துள்ளார்' என்று இப் புதிய துறையார் கதறுவர். கற்றவர் தொழுதேத்துங் காழிவேந்தர் காலத்தில் தமிழ்நாட்டில் சமணர் மிகாமல் வேதநிந்தையில் அவர் தம்பிமாராகிய இப் புதிய துறையார் மட்டும் மிகுந்து கிடந்தாரேயாமாயின், 'கோற்றொழில் திருத்தவல்ல குலச்சிறையார்' நிறுத்திய கழுத்தறியில் எமது பூசுரர்சிங்கம் இக் கூட்டத்தினரை

---

* திருக்குறள் 1073.

† சுருதிசூக்திமாலை.

* சாமுசித்தர் - முற்பிறப்பிற் செய்த புண்ணிய விசேஷத்தால் அவ்வறிவோடு பிறந்து சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டவர்.

‡ வைநயிகர் - விநயசம்பந்தமுடையவர்.

† சுருதிசூக்திமாலை.

$ சிவஞானபாஷ்யம்.

** மெய்ஞ்ஞானிகள்.

யன்றோ அழுத்தித் தைத்து வேதாகமங்களின் †வழுத்தபு தெய்வீகத்தை விளக்கியிருக்கும்! யாமும் அப்போது மங்கையர்க்கரசியாரின் செங்கமல பொதநிழலில் தங்கி அக் காட்சியைக் கண்டுகொண்டிருக்கும் பாக்கியத்தைப் பெற்றிருந்தேமாயின் 'ஆஹா! போதமாவது முக்கட்புராணனை யறிவதென்னும் வேதநீதியை விடுத்துப் பருப்பொருளுணர்ந்த இப் பேதை நீரார் படுவன பாரீர், பாரீர்' என்று கூறி ஏமாப்பேம்.

‡'சிவனடியே சிந்திக்குந் திருப்பெருக சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்'

என்றபடி—சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானமாகிய உவமையிலாக் கலைஞானம் எனப்படும் அபரஞானத்தையும், பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங்கிய ஞானமாகிய உணர்வரிய மெய்ஞ்ஞானம் எனப்படும் பரஞானத்தையும் குழைத்து ஜகதம்பிகை அருத்திய தீம்பாலினை யுண்டருளிய குறைவிலா நிறைஞானக் கொண்டலார்க்கு—ஓதாது ஞானமெலா முணர்ந்தார்க்கு—வேதமொடு சைவநெறி விளக்க வந்த கவுணியனார்க்குப்—பிராகிருதத்தடிப்பேறிய சரித்திர ஆராய்ச்சி ஞானமில்லையென்று அப் பெருமானது அவதார காலத்தை இகழுமுகத்தாற் கூறிய பாவகாரிகட்கு ஐயோ! உலகநூற் கல்வியும், அக் கல்வியாளரும் சிவஞானப்பேற்றிற்குப் பெருந் தடையென்பதை விளக்கும்

*'கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும்'
*'கற்றாரை யான் வேண்டேன்'

என்னும் மணிவாசகங்களை யறியாத அப் பாவகாரிகட்கு ஐயோ! எச்சிற்குழிச் சித்திரான்னம் அக் குழியில் வசிக்குங் காக்கைகட்கே நெய்யும் பாலுந் தேனும் ஒழுகுவதுபோன்று இனிக்குமன்றி, மானஸவாவியில் வசிக்கும் ஹம்சங்கட்குச் சிறிதேனும் ஏற்குமோ? ஆகலின், §'உள்ள நிறை கலைத்துறைக ளொழிவின்றிப் பயின்றவற்றாற், றெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன்கழலிற் செறி'வென்று தெருட்டவல்ல சிவஞான முனிவர்பிரான், 'வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப், பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத, சீதவள வயற் புகலித் திருஞான சம்பந்த'ப்பிரான் எக்காலத்து அவதரிக்கினும் ஏனைய நெறிகளையுந் துறைகளையும் மதித்து மயங்குவதில்லை. எனவே, பூமியில் உள்ள ஆன்மாக்களை ஈடேற்றும் பொருட்டுச் சஞ்சரிக்குஞ் சிவன்களே அவர்கள் என்று யாங் கூறி அப் பெரியாரைப் பிழையாது வந்தித்து வாழ்வேம். (தொடரும்.)

---

† வழுத்தபு தெய்வீகம்—குற்றம் நீங்கிய தெய்வத்தன்மை.
‡ பெரியபுராணம், திருஞானசம்பந்தர்புராணம்.
* திருவாசகம். § பெரியபுராணம்.